Regd M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு



மலர் 28 | ஜய பங்குனி 1955 மார்ச் | இதழ் 3

## எறிபத்தர் ஆண்மைத் தொண்டு

[பத்திராசிரியர்]

"எல்லையில் புகழின்மிக்க எறிபத்தர் பெருமை எம்மால் சொல்லலாம் படித்தன்று" எனச் சேக்கிழார் கூறுகின்றார். "அழலவிர் சடையான் அன்பர்க்கடாதன அடுத்த போது முழையரி என்னத்தோன்றி முரண்கெட எறிந்து தீர்க்கும் உதவியே" அவருடைய தொண்டின் பெருமையாகும். கருவூர் ஆனிலை மாதேவற்கு பூமாலை கோத்துச் சாத்தும் தொண்டு செய்தவர் சிவகாமியாண்டார் எனும் முதியவர். ஒருநாள் பூங்குடலை யெடுத்து வருகிற வழியில் புகழ்ச்சோழன் பட்டத்து யானை அக்குடலையைப் பறித்துச் சிந்திற்று. சிவகாமியாண்டார் யானையை அடிக்க விரைந்தோடினர், செல்ல முடியாது தவறி வீழ்ந்தார், "சிவதா சிவதா, சிவதா" என்றழுதார். எறிபத்தர் இதைக்கேட்டு, அந்த யானை போனவழியே தானும் விரைந்தோடித் தன் கையில்இருந்த பரசுகொண்டு அந்த யானையின் துதிக்கையை வெட்டிவீழ்த்தார். "அச்சம், தாய் தலையன்பின் முன்பு நிற்குமே!" என்று இவர் வீரத்தைச் சேக்கிழார் புகழ்கின்றார். யானைப்பாகர் கோற்பாகர் ஆகிய ஐவர் இவரைத் தாக்க அவ்வைவரையும் எறிபத்தர் வெட்டி வீழ்த்தார். சில நிமிஷங்கட்குள் இச்செய்திகள் சோழமன்னற் கெட்டின. தனது பகைவன் எவனோ இவ்வாறு செய்தான் என்று மருண்ட வேந்தன், உண்மையை உணர்ந்த பின்பு, தனது கோல் முறை தவறியதால் நேர்ந்த பிழைக்குத்தான் உயிர் விடுதலே தகுதியென்றெண்ணினன். அவனைத் தடுத்

துத் தாமே உயிர் விடுதற்கெண்ணினர் எறிபத்தர். அவர் தமது கழுத்தையரிய வொட்டாது இறுகத்தழுவிக் கொண் டான் சோழமன்னன். "அளவிலாப் பரிவில் வந்த இடுக் கணை அகற்றவேண்டி," அசரீரிவாக்கினால், "அன்பின் மிக்கீர்! தொண்டினை மண்மேல் காட்ட...கூத்தர் அருளி னால் கூடிற்று" என்ற விளக்கம் எழுந்தது, யானையும் பாகரும் உயிர்பெற்றெழுந்தனர்." ஆளுடைத் தொண்டர் செய்த ஆண்மையும் தம்மைக் கொல்ல, வாளினைக் கொடுத்து நின்றவளவனர் பெருமைதானும், நாளுமற்றவர்க்கு நல்கும் நம்பர்தாம் அளக்கில் அன்றி, நீளுமித்தொண்டின் நீர்மை நினைக்கில் ஆர்அளக்க வல்லார்" என்று சேக்கிழார்பெரு மான் எறிபத்தருடைய ஆண்மைத் தொண்டினைப் புகழ்கின் றார். இந்த ஆண்மைத் தொண்டே இன்று நமது சமயத் துக்குத் தேவையானது. நமது சமயத்தைக் குலைத்தழித் தொடுக்க, புறப்பகைவர்களும் உட்பகைவர்களும் நாளுக்கு நாள் மிகுதியாகின்றனர். எறிபத்தரைப் போன்ற ஆண் மைத் தொண்டர்களாக ஒவ்வொரு சைவரும் பணிபுரிதல் வேண்டும். சக்தி நாயனர் தொண்டும் ஆண்மைத் தொண் டாகும். சிவனடியார்களை எவரேனும் இகழ்ந்து பேசினால், அவர் நாவை இழுத்து அரிதல் அவர் செய்த தொண்டு. "அன்னதாகிய ஆண்மைத்திருப்பணி...பரிவாற்செய்து...செந் நெறி ஆற்றினர்" என்பர் சேக்கிழார். செருத்துணை நாயனர், திருவாரூரில் திருப்பூமண்டபத்தில் ஒரு மலரை எடுத்து மோந்த பல்லவன் தேவியின் மூக்கை யரிந்தார். இவ்வாறே, மிகத்துணிவாக நாமும் பணிபுரிந்து பகைவர் களை அடக்கி, ஒடுக்கவேண்டும். இது நமது நாயன்மார்கள் காட்டிய வழி.

1953-ஆம் கார்த்திகை விழாவின்போது திருவாளர்கள் சச்சிதாநந்தம்பிள்ளை, ஆறுமுகசாமி நாடார் முதலியவர் கள், கிறிஸ்தவப் பிரசாரகர்கள் அருணை முழுவதும் திரிந்து, எளிய மக்களை ஏமாற்றுவதை எப்படி ஒழிப்பதென்று கேட்டார்கள். "ஆண்மைத் தொண்டு செய்க" (Militant Saivism) என்றேன். அத்துறையிலிறங்கி, மலைவலம் வரும் போது ஆயிரக்கணக்கான கிறிஸ்தவப் பிரசாரத் துண்டு வெளியீடுகளைப் பறிமுதல் செய்து பல மணங்குகள் எடை யுள்ளவற்றைப் பல கோணிப்பைகள் நிறையச் சேர்த்துக்

கொணர்ந்தார்கள். இது ஆண்மைத் தொண்டில் ஒரு சிறு கூறு. கடலிற்கரைக்கும் பெருங்காயத்தையே ஒக்கும். நமது தமிழ் நாட்டிலுள்ள சைவ சபைகள், பலவகையான திட்டங்கள் செய்துகொண்டு, அவ்வப் பகுதிகளிலுள்ள உட்பகை புறப்பகைகளை, ஆண்மைத் தொண்டாற்றி அடக்கி ஒடுக்கி அழித்தல் வேண்டும். சைவ மன்னர்கள் ஆட்சியில்லாத நிலையில், சமயச்சார்பற்ற secular state ஆட்சியுள்ள இக்காலத்தில், ஒவ்வொரு சமயமும் தற்பாது காப்புக்கு வேண்டிய எல்லா முறைகளையும் கையாளுதற் கென்றே, கடவுள் இந்நிலைகளை ஏற்படுத்தியுள்ளார்.

இன்று (10—3—1955) எறிபத்தர் திருநாள். ஆண்மைத் தொண்டர்கட்கெல்லாம் சிரோமணியாகிய இப்பெரியார் திருநக்ஷத்திரத்திலேனும், நாம் எல்லோரும், இயன்றவரை ஆண்மைத் தொண்டு செய்து நமது சமயத்தைக் காப்பாற்றி, எல்லாவித பகைகளையும் ஒழித்து வெற்றி பெற உறுதிகொள்வோமாக. ஆண்மைத் தொண்டர்களை அவ்வப்போது தனுப்பி உபகரிக்கும் தொண்டர்நாதன் திருவருள் துணைநிற்பதாக. ஆண்மைத் தொண்டு வெல்க! சைவம் வெல்க !!

---

## வள்ளி சன்மார்க்கம்

(இராவ்சாஹிப் நல். முருகேச முதலியார், B. A.)

முன்னுரை: இச்சொற்றொடர் "கள்ளக்குவாற்பை தொளைப் புலாற்பை" எனத் தொடங்கும் திருப்புகழ்ப்பாடலில் வருகின்றது. இச்சொற்றொடரின் பொருள் "வள்ளி அம்மையார் கடைப்பிடித்துக் காட்டிய நன்னெறி" என்பதாகும். அஃதாவது, "தன்னை மறந்தாள் தன்நாமங்கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" என அப்பர் பெருமான் கூறுதல்போல, யாரொருவர் தன்னை இழந்து யான் எனது என்பது அற்றுத் தலைவனை நாடுகின்றனரோ, அவர்க்கு இறைவன் தானே நாடிவந்து அருள்புரிவான் என்பதாகும். அரிய இம்மறை நுண்பொருளைத்தான் முருகப்பிரான் சிவபெருமானுக்குச் செவியறிவுறுத்தார் என்று, "ஐயா! அருணகிரி அப்பா! உனைப்போல மெய்யாக ஓர் சொல் விளம்பினரார்" எனத் தாயுமானவர் வியந்து பாராட்டும் பெருமை

பெற்ற அருணகிரிநாதர், தமது திருப்புகழிற்பலவிடங்களிற் குறிப்பிடுகின்றார். எனவே, "வள்ளி சன்மார்க்கம்" என அவர் குறிப்பிடும் பொருள் எத்துணைச் சிறப்புடையது என்பது விளங்கும்.

வள்ளியம்மை மாட்சி : வள்ளியம்மையார் முருகப்பெருமானின் இச்சாசத்தியாவார். முருகனது ஆறு திருமுகங்களுள் ஒருமுகம் எப்போதும் "குறவர்மடமகள் கொடிபோல் நுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே" என நக்கீரர் கூறுவர். "வேடுவர் சிறுமி ஒருத்திக்கு யான் வழியடிமை எனச்செப்பி, வீறுள அடியிணையைப்பற்றி, வேதமும்அமரரும் மெய்ச்சக்ர வாளமும் அறிய விலைப்பட்டு, மேருவில் மிகவும் எழுத்திட்ட பெருமாளே" எனவும், "பாளைக் குழல் வள்ளி பதம் பணியும் வேளைச் சுரபூபதி" எனவும், "பணியா என வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனே" எனவும், பிறவாறும், அருணகிரியார் வள்ளியினிடத்தில் முருகன் கொண்டுள்ள அன்பின் திறனைப் பற்பலவாறு பாடுகின்றார். திருப்புகழிற் பல இடங்களில் முருகன் வள்ளி இருந்த காட்டுக்கு அடிமைக் கும்பிடு போட்டார் - வள்ளியம்மைக்குக் குழை ஓலையில் அடிமைச் சாசனம் எழுதினார் - வள்ளியின்பால் நீயே எனக்குத் தஞ்சம் என்றார் - வள்ளியை அருச்சித்தார் - வள்ளியின் காலை வருடினார் என்றெல்லாம் கூறப்பெற்றிருத்தல் காணலாம். தெய்வ வள்ளி, ஞானக்குறமகள், பதிவ்ரதை, சோதிப்ரகாசச் செயலாள் எனப் பலவகையில் திருப்புகழ் வள்ளியம்மையினைப் புகழ்ந்து போற்றும்.

வள்ளியம்மை வரலாறு: திருமாலின் கண்களில் தோன்றிய அமிழ்தவல்லி சுந்தரவல்லி என்னும் பெண்கள் இருவரும் தவங்கிடந்து வழிபட்டுத், தம்மை மணம் செய்துகொள்ள வேண்டும் என முருகனை வரம் கேட்டனர். முருகப்பிரான் அருளியவாறு அமிழ்தவல்லி விண்ணுலகம் சென்று, தெய்வயானை என்னும் பெயருடன் வளர்ந்து வந்தாள். அவ்வாறே சுந்தரவல்லி என்பவள் மண்ணுலகில் தொண்டை நாட்டில் மேற்பாடி என்னும் ஊருக்கு அருகில் உள்ள மலைச்சாரலில், சிவ முனிவர் அருள் நோக்கால் ஒரு மான் வயிற்றில் மகளாகத் தோன்றி, "பத்திபடு வள்ளிப் படுகுழியில் வந்திடலால், வாய்த்த இவள் நாமம் வள்ளி" எனப் பெயர்பெற்று,

வேடர்களால் எடுத்து வளர்க்கப் பெற்று, பின்னர் முருகனால் களவு கற்பு என்னும் தமிழ் நெறிகள் இரண்டனுள், களவு நெறிக்கேற்ப மணந்து கொள்ளப் பெற்றாள் என்பது வரலாறு. பரிபாடல் என்னும் சங்கத் தொகை நூல், "நான்மறை விரித்து நல்லிசை விளக்கும், வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது" எனத் தொடங்கி, வள்ளியம்மையின் சிறப்பைக் கூற முற்பட்டு, களவிற் புணர்ச்சியின் சிறப்பைக் கூறி, அக்களவிற் புணர்ச்சி பெற்றமையான் வள்ளியம்மை சிறந்தவாறும், அக்களவிற் புணர்ச்சி நெறியுரைக்கும் தமிழை ஆராய்ந்தமையான் முருகன் சிறந்தவாறும் கூறுதல் காணலாம்! இத்தகைய சிறப்புடைய வள்ளியம்மை வரலாற்றின்கண் அரிய பல மெய்ப்பொருள் நுட்பக் கருத்துக்கள் பெரிதும் மறைந்து செறிந்து கிடக்கின்றன! இக்குறிப்பை,

> " உலைப்படும் மெழுக தென்ன உருகியே ஒருத்தி காதல்
> வலைப்படு கின்றான் போல வருந்தியே இரங்கா நின்றான்
> கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலில் தோன்றி
> அலைப்படு தன்மைத் தன்றோ அறுமுகன் ஆடல் எல்லாம் "

எனக் கச்சியப்பர் புலப்படுத்தியருளல் உளங்கொளற்பாலது. எனவே, வள்ளியம்மை வரலாற்றின்கண் விளங்கும் அரிய பல நுண்பொருள்கள் யாவை என இங்குச் சிறிது ஆராய்வோம்.

வள்ளி சன்மார்க்க மறைநுண் பொருள்கள்: வள்ளியம்மை முருகனை மணம் புணர்ந்த கதை, ஓர் உயிரானது இறைவனோடு இரண்டறக் கலக்கும் பேறுபெறும் நிலையை உணர்த்துகின்றது, எனவே, வள்ளியம்மை உயிர், முருகன் இறைவன், மணம் புணர்தல் இரண்டறக் கலத்தல் எனத் தெளியலாம். வள்ளியம்மை " தழைபுனைந்து தனதுணர் வின்றியே உழைவயின் வந்து உதித்தனள் " என்பது, உயிரானது திருவருளினாலே 36 தத்துவங்களாலாகிய உடம்பிற் புகும் எனவும், அவ்வுடம்பிற் புகுந்தபின் உயிர் தன் பழைய உணர்ச்சிகள் நீங்கப் பெறும் எனவும் குறிப்பிக்கின்றது. வள்ளிமான் வயிற்றில் தோன்றினாள் என்புழி, மான் என்பது மூலப் பிரகிருதியைக் குறிக்கும் பரியாயச் சொல்லாதல் காணலாம். அவள் வள்ளிக்குழியில் கிடந்தாள் என்பது, தூலசரீர கர்ப்பம் அல்லது காரிட்ட ஆணவக்

கருவறை என்பதன்கண் உயிர்தங்கிக் கிடக்கும் நிலையைக் குறிக்கும். ஏனைய வேடர்களாகிய பரிசனங்கள் சூழப் போந்த வேடர்குலத்தலைவனாகிய நம்பிராசன் வள்ளியினைக் கண்டெடுத்துச்சென்று தன்மனைவியிடம் கொடுத்துவளர்த் தான் என்புழி, பரிசனங்களாகிய வேடர்கள் கன்மேந்திரி யங்களையும், நம்பி ஐம்பொறிகளையும், அவனது மனைவி ஐம் புலன்களையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இங்ஙனம்,

" முல்லைப் புறவ முதல்வன் திருமடந்தை,
கொல்லைக் குறிஞ்சிக் கிழவன் மகளாகிச்,
சில்லைப்புன் கூரைச் சிறுகுடியில் சேர்ந்தனளால்
தொல்லைத் தனித்தந்தை தோன்றியமர் வுற்றதுபோல் "

என்றது, கேவல சகல சுத்தநிலைகளை ஒருவகையிற் குறித்த தாகக் கொள்ளப்படும். அம்மை சிறு குழவியாய்ச் சின்னாள் தொட்டில் வாழ்க்கையளாய்க் கிடந்தமை, உயிரானது அறிவு விளக்கம் சிறிதுமின்றி உலகாயதம் முதலிய புறப் புறச் சமயங்களில் உழலும் தன்மையை உணர்த்துவதாகும். அம்மை வேடர்களின் சூழலில் வளர்ந்து வந்தமை, " ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனை " எனவும், " மன்னவன் தன் மகன் வேடர் இடத்தே தங்கி வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்ப " எனவும் முறையே வரும் சிவஞானபோதம் சிவஞானசித்தியார் பகுதிகளை நினைப்பிக்கின்றன. அம்மை பின்னர்ச் சிறிது வளர்ந்து சிற்றில் இழைத்தும் சிறுசோறு அமைத்தும் விளையாடியமை, உயிரானது புறச் சமய நெறி களில் ஈடுபட்டு உழலுதலை உணர்த்தும். பேதைப்பருவம், பெதும்பைப் பருவங்களை அம்மை எய்துதல், உயிரானது அகப்புறச்சமயத்தும்அகச்சமயத்தும்சார்ந்துவருதலைக்குறிப் பதாகக்கொள்ளப்படும்.அம்மையார்பன்னிரண்டாம்அகவை நிரம்புதல், உயிரானது சித்தாந்த சைவச் செந்நெறியைத் தலைப்பட்டு அவ்வாழ்க்கையினைத்தொடங்குதல்உணர்த்தும்.

" காட்டில் எளிதுற்ற கடவுள்மணி யைக்கொணர்ந்து
கூட்டில் இருளோட்டக் குருகுய்த்த வாறன்றோ
நீட்டுசுடர் வேற்குமரன் தேவியாம் தெள்ளமுதைப்
பூட்டுசிலைக் கையார் புனங்காப்ப வைத்ததுவே "

என்றபடி, அம்மைதினைப்புனம்காக்கமுற்பட்டமை, உயிரா னது பலவகைப்பசுபுண்ணியங்களைச்செய்ய முயலுதலைக்

குறிக்கும். நாரதர் வள்ளியம்மையைக் கண்டு முருகனுக்குச் சென்று கூறுதலும், வள்ளியை மணம்புரிந்து அருள் செய்க என அவரை வேண்டுதலும், ஆதிசக்தி மலத்தைப் பக்குவப் படுத்தி உயிர்க்கு மலபரிபாக நிலையை வருவித்தலைத் தெரிவிக்கும். முருகன் வள்ளியை மணம்புணர வருதல், ஞானாசிரியன் தனக்கினிய மாணவனை நோக்கித் தலைப்பட வருதலாகும். வள்ளியும் முருகனும் உரையாடுங்கால் வேடர்கள் வருதல், ஞானாசிரியனைக்கண்டதனால்நன்னெறிதலைப்படப் புகும் உயிரை, ஆறுகோடி மாயா சக்திகள் வேறு வேறு தம் மாயைகள் தொடங்கி அலைக்க முயலுதல் போல்வதாகும். முருகன் வள்ளியின்பாற்பேசுதல், ஞானாசிரியன் முதற்கண் செய்யும் வாசக தீக்கையைக் குறிப்பதாகும்.

"மொழியொன்று புகலாயாயின் முறுவலும் புரியா யாயின்
விழியொன்று நோக்கா யாயின் விரகமிக் குழல்வேன் உய்யும்
வழியொன்று காட்டா யாயின் மனமும்சற் றுருகா யாயின்
பழியொன்று நின்பாற் சூழும் பராமுகம் தவிர்தி"

என அம்மையின்பால் முருகன் வேண்டுதல் போலவே, ஞானாசிரியனும் தன் இனிய மாணவனுக்குப் "பராமுகம் தவிர்தி" என ஞானவுரை பகர்ந்தருள்கின்றான்! "பராமுகம் தவிர்தி" என்னும் ஞானோபதேசம், மாணவனுக்கு "ஒருநெறிய மனம் வைத்துணர்" "இரண்டுற மனம் வையேல்" என்பனபோல வரும் திருமொழிகளின் பொருளை அறிவுறுத்துவதாகும்.

இனி, வேடர்கள் வருங்கால் முருகன் வேங்கைமரமாய்த் தினைப்புனத்தில் நின்றான் என்பது, ஐம்பொறிகள் தன்னை நிலைகலக்க முயலும்போது, உயிர் தனது வேதாகம சாத்திர நூலறிவால் மனத்தை ஒருவழிப்படுத்தி நிலையின் நீங்கப் பெறாது உறுதியாக இருக்க முயலுதலைப் புலப்படுத்தும்.

"ஆங்கது காலை தன்னில் அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம் உயிர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையின் உருவ மாகி வேற்படை வீரன் நின்றான்"

என்னும் பாடலால் கச்சியப்பரும் இக்குறிப்பை விளக்கியருளி இருத்தல் அறிந்தின் புறற்பால தொன்றாகும்.

இனி, முருகன் அம்மையை நோக்கிப் பலவகை விருப்புரைகள் நிகழ்த்த, அம்மை "இழிகுலமாகிய எயினர் பாவைநான்" எனத் தம்மைக் கூறிக்கொள்ளுதல். உயிர் தன்னைத் தானே அறிந்துகொள்ளாத அறியாமை நிலையை விளக்குவதாகும். அதுபோது வேடர்கள் மீண்டும் வருதலைக் கண்டு, முருகன் "நாடு புகழ் சைவ நற்றவ விருத்த வேட" மது கொள்ளுதல், உயிர் புலன்களை அடக்கித் தூயதவ நன்னெறியே சேர்வதற்கு முயலுதலைக் காட்டும், அந்நிலையில் முருகன் குறவர் செம்மலுக்குத் திருநீறு நல்குதல், சிவதீக்கையிற் செய்யப்படும் முதற்செயலை உணர்த்தும். பின்னர் அம்மை முருகனாகிய முதியவர்க்குத் தேனோடு கனியும் மாவும் செங்கையாற் கொடுத்தல், ஞானாசிரியனுக்கு மாணவன் தன் உடல்பொருள் உயிர்களை ஒப்புவித்து "ஆத்தும நிவேதனம்" செய்ய முற்படுவதைக் குறிக்கும். அதுகாலை, முருகன் வள்ளியை நோக்கி, "ஆகத்தை வருத்துகின்ற அரும்பசி தவிர்த்தாய்! தெண்ணீர்த் தாகத்தை அவித்தாய்! மேகத்தை அனைய கூந்தல் மெல்லியல், வினையேன் கொண்ட மோகத்தைத் தணித்தியாயின் முடிந்தது என் குறை" என்று கூறுதல், "ஏகபோகமாய் நீயும் நானுமாய்" என்றபடி உயிரோடு இறைவன் இரண்டறக் கலந்து நிற்க விரும்பும் பேரன்பு நிலையைப் புலப்படுத்துகின்றது. அம்மை அதனைக் கேட்டு,

> "நத்துப் புரைமுடியீர்! நல்லுணர்வு சற்றுமிலீர்!
> எத்துக்கு மூத்தீர்? இழிகுலத்தேன் தன்னைவெஃகிப்
> பித்துக்கொண் டாற்போல் பிதற்றவீர்! இவ்வேடர்
> கொத்துக்கெல் லாம்ஓர் கொடும்பழியைச் செய்தீரே!"

எனச் சினந்து கூறல், "போதம் மேலாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்" உயிரை மலவாதனை தாக்குமாற்றை உணர்த்துகின்றது. முருகன் விநாயகக் கடவுளைத் துதித்து யானையாக வரச் செய்தல், தற்போத முனைப்புக் கெட ஞானாசிரியன் உயிருக்குப் பிரணவ மந்திரோபதேசம் செய்தலாகும். பிரணவ மந்திர உபதேசம் செய்ய, உயிர்க்குத் தற்போதம் அடங்கும். அப்பொழுது உயிர் எல்லாம் திருவருளின் செயலே தன் செயலன்று எனத் தெளிந்துகொள்ளும். தெளிந்தால், உயிர் கடவுளை முன்னிட்டுத் தான் அவரில் அடங்கும். இக்கருத்தையே,

" அன்ன தொருகாலை அறுமா முகக்கடவுள்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
இந்நடுவே நின்றான் எறும்வயிரத் தூணேபோல் "

என்னும் பாடலால் கச்சியப்பர் குறிப்பிட்டு ஒருவகையால் விளக்குதல் காணலாம். பின்னர் அம்மைக்கு முருகன் காட்சி தருதல், உயிர் எய்தப் பெறும் " சிவதரிசன " நிலையை விளக்கும். ஆண்டு அம்மைக்குத் தோழியாகக் கூறப்படுபவள், இறைவன் திருவருளேயாம். முருகன் தோழியை இசைவித்தமை, விசேட தீக்கை எனலாம், வள்ளியம்மை மீண்டும் தினைப்புனம் காக்கப் போதல், எஞ்சிநின்ற வினையின் பயனை உயிர் துய்த்தொழித்தலைக் குறிக்கும். வேடர்கள் வள்ளியை மீட்க முயல்வது, பொறி புலன்களின் இறுதி மயக்க முயற்சியை உணர்த்தும். சேவல் கூவுதல், " அஞ்சல் ஓம்புமதி " என இறைவன் உயிர்க்கு அருளிச் செய்தலைப் புலப்படுத்தும். வேடர்கள் மயங்கி விழுதல், உயிரின் மலபந்தங்கள் அற்றொழிதலைக் குறிப்பிக்கும். அங்கு நாரதர் வருதல், அதி தீவிர சத்திநிபாதம் பதிதலாகும். முருகன் அருளால் அம்மை வேடர்களை மீட்டும் எழுப்புவித்தல், உயிர் தன் பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறப்பெறுதலைக் காட்டும். முருகன் வள்ளியை முறைப்படி மணம்புணர்தல், மிக மேலான நிர்வாண தீக்கை நிலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். முருகன் வள்ளியுடன் திருத்தணிகை சார்தல், உயிர் மலங்கள் ஒழிந்த நிலையில் இறையருளின்பிற் கலந்தொன்றித் திளைத்தலை அறிவிக்கும்.

முடிவுரை : எனவே, "வள்ளி சன்மார்க்கம்" என்னும் அழகிய இனிய அருந்தொடர் குறித்த வள்ளி திருமணப் படல வரலாறானது, உயிர்கள் படிமுறையாகச் சிவநெறியை அடைந்து, நால்வகை நெறிகளாகிய சரியை கிரியை யோகம் ஞானம் என்பவற்றைக் கடைப்பிடித்து, வீடுபெற்றுய்யும் உண்மையினை உணர்த்துவதாக இங்ஙனம் அறிஞர்கள் அதன் உட்கிடையாய மெய்ப்பொருளை விளக்குவர். இனி, சூரபதுமனுடைய மதம் " மிண்டிய மாயாவாதம் " என்றும், தக்கன் மதம் பாஞ்சாரத்திரம் என்றும், தாருகாவன முனிவர்களின் மதம் பூர்வமீமாம்சை என்றும், இந்திரன் மதம் உலகாயதம் என்றும், இம்மதங்களெல்லாம் அவற்றிற்

குரியவர்கள் அழிக்கவும் அடக்கவும் பட்டதனுல் மறுத்தொழிக்கப் பெற்றுவிடவே, "வள்ளியம்மை திருமணப் படலம்" சித்தாந்தச் செந்நெறியைச் சுபக்க முறையால் நிறுவி நிலைநாட்டியதாகும் என்றும் பிறிதொருவகையில் அறிஞர்கள் கூறுவதும் உண்டு. "வள்ளி சன்மார்க்கம்" குறிக்கும் இத்தகைய சிறந்த சித்தாந்தச் செந்நெறியைக் கடைப்பிடித்து, நம்மனேர் அனைவரும் அன்பு நெறி நின்று நன்ருெழுகி இன்பநிலை தலைப்படுதற்கு, எல்லாம் வல்ல இறைவன் திருவருள் துணைசெய்வதாக!

---

# அப்பூதி அடிகள்

(சு. சிவகுமாரன, எம். ஏ.)

தமிழ் நாட்டில் சைவசமய ஆசாரியர்கள் நால்வரில் திருநாவுக்கரசு சுவாமிகளைப் பற்றி அறியாதார் இருக்க மாட்டார்கள். இவரை அப்பர் சுவாமிகள் என்றும் சொல்வது உண்டு. திருநாவுக்கரசர் நம் நாட்டில் கி. பி. ஆரும் நூற்ருண்டில் திகழ்ந்தவர். அவர் அன்பும் அடக்கமும் உருவானவர். எப்பொழுதும் கடவுளைப்பற்றிய சிந்தனையே உடையவர். உருக்கமாகத் தமிழில் கடவுளைத் தோத்திரம் செய்பவர். நாமார்க்கும் குடியல்லோம் என்று சொன்னவர். ஆயினும் என் கடன் பணி செய்து கிடப்பதே என்று வாழ்ந்தவர். தன்னை விரோதிகள் கல்லில் கட்டிக் கடலில் பாய்ச்சினும் 'நற்றுணையாவது நமச்சிவாயவே' என்று கடவுளைத் துதித்துக், கல்லே தெப்பமாக மிதந்து,கரையேறிவர்.

இப்படிப்பட்ட திருநாவுக்கரசரின் பக்தி விசேஷங்களைக் கேள்விப்பட்ட, திங்களூர் அப்பூதி அடிகள் என்னும் ஒரு பெருந்தன்மையாளர், அவரை நேரில் காணப்பெருதிருந்தும் அவரிடம் அளவிலா அன்பும் விசுவாசமும் கொண்டு, தன் குழந்தை குட்டிகளுக்கும், தன்வீட்டில் உள்ள பசு, கன்றுகளுக்கும்கூட திருநாவுக்கரசு என்றே பெயர் வைத்திருந்தார். தான் அமைத்த ஒரு அழகிய தண்ணீர்ப் பந்தலுக்கும் 'திருநாவுக்கரசு சுவாமிகள் தண்ணீர்ப்பந்தல்' என்று பெயரிட்டிருந்தார்.

ஒருநாள் பகல் பன்னிரண்டு மணியிருக்கும். சிவப்பழமாகிய ஒரு துறவி அந்த வழியாக வந்தார். தண்ணீர்ப்பந்த

வின் முன்பக்கம், பெரிதாக எழுதியிருந்த 'திருநாவுக்கரசு சுவாமிகள் தண்ணீர்ப்பந்தல்' என்பதைப் படித்தார். அருகிலிருந்தவரை 'இந்தத் தண்ணீர்ப்பந்தல் அமைத்தவர் யார்' என்று கேட்டார். அவர்கள் 'அந்தணரின் மேம் பட்ட அப்பூதி அடிகள் அமைத்தது இப்பந்தல்' என்று சொல்லிப், பக்கத்துத் தெருவிலிருந்த அவர் வீட்டிற்குப் போவதற்கு வழியும் சொன்னார்கள்.

துறவி அப்பூதி அடிகளின் வீட்டிற்குப் போனார். அப் பூதியாரும் அவரை வரவேற்றார். வந்தவர் அப்பூதி அடி களை "அந்தத் தண்ணீர்ப் பந்தலுக்கு உங்கள் பெயரை வைக்காமல், வேறு என்னவோ ஒரு பெயர் வைத்திருக்கிறீர் களே என்ன காரணம் ?" என்று கேட்டார்.

" ஆறணியுஞ் சடைமுடியார் அடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந்தலில் நும்பேர் எழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணம்என்கொல்
கூறும்" என எதிர்மொழிந்தார் கோதில்மொழிக் கொற்றவனார்.

அப்பூதி அடிகளுக்குத் தன் உயிரினும் இனிதாகிய "திருநாவுக்கரசு" என்னும் திருப்பெயரை வாயாரச் சொல்லாமல் 'வேறு ஏதோவொரு பெயர்' என்று அவ்வளவு அலட்சியமாகப் பேசும் இந்தத் துறவி யார், எந்த ஊர், பார்த்தால் சிவவேடம் தாங்கியிருக்கிறாரே என்று ஆச்சரியப்பட்டு, ஏமாற்றமும் கோபமும் கொண்ட வராய், 'தாங்கள் பேசியது நன்றாக இல்லை' என்றார். அப்பூதிஅடிகளுக்குப் பொங்கிய கோபத்தில் எழுந்த சொல் லின் மிடுக்குஇவ்வளவுதான் என்றால், அவரது பொறுமைக் கும் பெருமைக்கும் வேறு உதாரணம் வேண்டுமோ ?

அந்தத் துறவியும் அப்பூதி அடிகளின் அன்பின் பெருமை அறிந்து, 'நானே அந்தத் திருநாவுக்கரசு என்னும் சிறுமையேன்' என்று உண்மையைச் சொல்லிவிட்டார். அப்பூதி அடிகள் இழந்த பொக்கிஷத்தை மீண்டும் பெற்ற வன் போல, பெரு மகிழ்ச்சி அடைந்து, வாய்குழறி, பேச்சு வராமல் குதித்துக் கூத்துமாடி, ஓடிப்பாடி, உற்றார் உறவி னர், மனைவி மக்கள் யாவரையும் விரைவில் அழைத்துக் கொண்டுவந்து, எல்லோரும் திருநாவுக்கரசர் திருப்பாதங் களில் விழுந்து வணங்கினார்கள்.

அப்பூதி அடிகள் அவரைத் தன் வீட்டின் உள்ளே அழைத்துக் கொண்டுபோய் பாதபூசை முதலியன செய்து, பின்னர் அவரைத் தன் வீட்டில் உணவு கொள்ளவேண்டும் என்று விண்ணப்பித்தார்; திருநாவுக்கரசரும் சம்மதித்தார். உடனே அப்பூதியாரும் அவர் மனைவியாரும், தம் மூத்த மகனாகிய முதல் திருநாவுக்கரசை அழைத்து, வீட்டின் பின்புறத் தோட்டத்திலிருந்து ஒரு வாழை இலை அறுத்துக்கொண்டு வரச் சொன்னார்கள். அந்த பிள்ளையும் ஒரு சிவனடியாருக்குச் சேவை செய்யும் பாக்கியத்தைத், தனக்கே தன் பெற்றோர்கள் அளித்தார்களே என்னும் மகிழ்ச்சியோடு தோட்டத்திற்கு ஓடினான். தன் குதூகலத்தில் வாழைக்குருத்தை அறுக்கும்போது அந்த குருத்தைச் சுற்றிக்கொண்டிருந்த ஒரு நல்ல பாம்பைப் பாராமல் அதையும் சேர்த்துப் பிடித்து வெட்டிவிட்டான். அந்த பாம்பும் தன் வலி பொறுக்கமாட்டாமல் அந்தச் சிறுவனின் கையில் கடித்துவிட்டது. சிறுவன் துடித்துப் போனான். விஷம் வேகமாக தலைக்கேற ஆரம்பித்தது. இவனுடைய மனோ திடத்தையும் வீரியத்தையும் பாருங்கள். விஷம் ஏறுகிற வேகத்தைக் காட்டிலும், இவன் அதிக வேகமாக வீட்டிற்குள் ஓடித்தன் தாயின் முன் வாழை இலையைக் கையில் நீட்டிக்கொண்டே துவண்டு விழுந்து இறந்துபட்டான்.

தளர்ந்து விழும் மகனைக் கண்டு தாயும் தந்தையும் மனம் பதறிப் போனார்கள். செம்மையான உள்ளம் படைத்தவர்களல்லவா? 'தீர்ந்துபோன விஷயம். விருந்தாவது சரிவர நடைபெறட்டும். திருநாவுக்கரசர் மறுபடியும் எப்பொழுது நம் வீட்டிற்கு வரப்போகிறார்' என்று, ஒரு விநாடியில் மனந்தேறி, பிணத்தைப் பாயில் சுருட்டிப் பக்கத்து வீட்டுப் புறக்கடையில் கிடத்திவிட்டு, ஏதும் அறியாதவர்கள்போலத் திருநாவுக்கரசு சுவாமிகளிடம் 'போசனத்திற்கு எழுந்தருளவேண்டும்' என்றார்கள். அன்னம் படைக்கப்பட்டது.

பழைய நல்ல வழக்கத்தின்படி, திருநாவுக்கரசர், உண்பதற்கு முன்னால் சிவத்தியானம் செய்து, எல்லோருக்கும் திருநீறு அளிக்க முற்பட்டார். அப்பூதி அடிகளின் இரண்டாம் மகன் விபூதி வாங்கிக்கொள்ள முன் வந்தான். திருநாவுக்கரசர் 'மூத்த மகன் எங்கே' என்று கேட்டுவிட்டார். பாவம்; அப்பூதி அடிகள் என்ன செய்வார்; உண்

மையைச் சொன்னால் திருநாவுக்கரசர் உணவு கொள்ள மாட்டார். பொய் பேசக்கூடாது என்ற தன் உயர்ந்த லட்சியத்தைக் கைவிடவும் முடியாது. மிகவும் சமத்கார மாக ‘இப்போது இங்கு அவன் உதவான்’ என்றார். திருநாவுக்கரசர் பெரிய ஞானியல்லவா; ‘அப்பூதியடிகளே! தாங்கள் கூறுவது எனக்குச் சரியாக விளங்கவில்லை. உண் மையை விவரமாகச் சொல்லுங்கள்’ என்றார். அப்பூதியார், வேறு வழியின்றி, மனம் கலங்கி, தன் மகனுக்கு நேர்ந்த விபத்தைச் சொன்னார்.

திருநாவுக்கரசர் ‘நன்றாக யிருக்கிறது உங்கள் செய்கை. காட்டுங்கள் அந்தப் பிள்ளையின் உடலை’ என்றார். பக்கத்து வீட்டில் புறக்கடையில் மறைத்து வைத்திருந்த சிறுவனின் உடம்பைத் திருநாவுக்கரசர் கோயிலுக்குக் கொண்டுவரச் செய்து அதனைத் தொட்டு, விபூதி பூசிப் பரம்பொருளைப் பாடித் துதித்தார். சிறுவனும் தூங்கி எழுந்தவனைப் போல் எழுந்து நின்று, திருநாவுக்கரசரின் திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.

அப்போது அவனது பெற்றோர் பெருமகிழ்ச்சி யடைந் தார்களேனும், ‘இவனாலல்லவா திருநாவுக்கரசர் உணவு கொள்ளத் தாமதமாகிவிட்டது’ என்று வருந்தினார்களாம். அவர்களது சிறந்த மனோநிலையைப் பார்த்தீர்களா?

பிறகு எல்லோருக்கும் உணவு தயார் செய்யப்பட்டது. வீட்டில் பசுவின் நீர் தெளித்து, கோலம் போட்டு, தலை வாழை இலையை அரிந்தபாகம் வலது பக்கமாக அமைத்து, திருநாவுக்கரசருக்கு உணவு பரிமாறப்பட்டது. அப்பூதி அடி களும் அவரது பிள்ளைகளும் உடன் அமர்ந்து உண்டனர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சில நாள் அவர்களோடு தங்கியிருந்து, பிறகு திருப்பழனம் முதலான ஊர்களில் கோயில் வழிபாடு செய்யப் புறப்பட்டுப் போனார். அப்பூதி அடிகளும் கடவுளைப் பூசித்து, தவத்தின் வழி அருளைப் பெறுவதற்குப் பதிலாகக், கடவுளின் அருளைப் பெற்றவ ராகிய திருநாவுக்கரசரையே தன் குருநாதனாகக் கொண்டு, அவரை வழிபட்டே நற்கதி யடைந்தார்.

இவ்வாறு அப்பூதி அடிகளின் மனைவாழ்க்கை, பண்பும் பயனும் உடையதாக விளங்கியதற்குக் காரணம், அவரைப் போலவே அவரது மனைவியாரும் மக்களும், சிவனடியார்

பக்தியில் ஈடுபட்டவர்களாக இருந்ததே யாகும். இது போலவே விருந்து உபசரிப்பது நம் குடும்பங்களில் ஒரு முக்கியமான கடமை; இதனை வீட்டில் உள்ள எல்லோரும் ஒத்து நிறைவேற்ற வேண்டும். அப்பூதி அடிகள் என்ன சோதனை வந்தபோதிலும், உண்மை தவிர வேறொன்றும் பேசாத் விரதம் உடையவர் என்பது அவரது ஒழுக்கத்தின் உயர்வை விளக்குகிறது.

இத்தகைய சைவ நற்பண்புகள் சிறந்த அப்பூதி அடிகளாரின் வரலாறு, பள்ளிப் பிள்ளைகளாகிய உங்களுக்கு விருப்பமானதாக இருப்பதோடல்லாமல், நல்ல புத்திமதிகளைக் கற்பிப்பதாகவும் இருக்கிறது. இந்த வரலாற்றினை மிக இனிய தமிழ்ச் செய்யுளில் சேக்கிழார் பெருமான் தம் பெரியபுராணத்தில் பாடியிருக்கிறார். பாட்டு அர்த்தம் தெரிந்துகொள்ள முடியாத அவ்வளவு கஷ்டமானதல்ல. இன்றே பெரியபுராணத்தை எடுத்து அப்பூதி அடிகள் புராணத்தைப் படிக்குமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

*அந்தமில்நல் திங்களூர்வரும் அப்பூதி அருமறையோர் திருநாவுக்கரசின் நாமம், பந்தரிடை எழுதக்கண்டாரசும் எய்தப் பணிந்து பரிகலநேடிப்படப்பை சேர்ந்த, மைந்தனுயிர் உயர்கதலி இலைமேல் துஞ்சும் வாளரவு கவர உடன்மறைத்தல் கேட்டுச், சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தால் தீர்த்துத் திருவமுதுசெய அருளைச் சேர்ந்துளாரே.*

---

## மாயை

### முத்து - சு. மாணிக்கவாசகனார்

மாயை ஆகிய காரணத்தின் நின்று தோன்றும் காரியங்களை, சப்தப்ரபஞ்சம் (ஒலியுலகம்) அர்த்தப்ரபஞ்சம் (பொருளுலகம்) என்று இருதிறமாகச் சொல்வர். அப்பிரபஞ்சங்களுக்கு மாயைதான் முதற்காரணம். அது நித்தியமானது, சடமாயிருப்பது. முதல்வனுக்கு அதுவும் சக்தியே ஆகும். அருவமாயிருப்பது. அம்மாயை சுத்தம் அசுத்தம் என்று இருவகையாகும். சுத்தமாயையை மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்றும் கூறுவர். அசுத்த மாயையை, அதோ மாயை, மாயை, மோகினி என்று குறிப்

பர். சுத்த மாயையிலிருந்து சுத்தப்ரபஞ்சம் தோன்றும். அசுத்த மாயையிலிருந்து அசுத்தப்ரபஞ்சம் தோன்றும். சுத்தப்ரபஞ்சம் சிவதத்வம் முதலிய ஐந்தும் ஆம். அசுத்தப்ரபஞ்சம் ஏனைக் கலை முதலியவை துன்பக் கலப்பு இல்லாமல் இன்பமாத்திரம் உதவும் ஏதுவால் சுத்தம் என்று கூறப்பட்டது. துன்பக் கலப்புடைய இன்பம் உதவுவது பற்றி அசுத்தம் எனப்பட்டது.

உலகம் தோன்றவும், இருக்கவும், அழியவும் காண்கின்றோம். இவ்வுலகில் பல உயிர்கள் பந்தம் அடைதலையும், சில உயிர்கள் முக்தி அடைதலையும், ஒரே உயிர் ஒரு வேளை பந்தம் அடைதலையும் மற்றொரு வேளை அப்பந்தித்த் பொருளினின்று முக்தி அடைதலையும் அறிகின்றோம். இவற்றைப் பின்பு ஐந்தொழில் என்று தனியே விளக்கி எழுதும் இடத்தில் அறியலாம்.

பிரபஞ்சத் தோற்றம், நிலை, இறுதி, உயிர்களின் பந்தம் முக்தி ஆகிய ஐந்தொழிலையும் செய்பவன் முதல்வன். அவனுக்கு லயம், போகம், அதிகாரம் என்று மூன்று அவஸ்தை உண்டு. அவஸ்தை என்றால், உலக வழக்கில் உள்ள அர்த்தத்தில் அன்று. அவஸ்தை ஒன்றுமிலா நிலையில் பரமசிவன் என்ற பெயரால் குறிக்கப்பெறும் அம் முழுமுதற் பொருளே, லயாவஸ்தையில் லயசிவன் எனப் பெயர்பெறும். இருவகை மாயையிலும் இருவகைப் பிரபஞ்சமும் ஒடுங்கிய நிலையில், எதையும் குறிக்காமல், எல்லாவற்றையும் பொதுவில் நோக்கி நிற்கும் பொருள் பரமசிவன். ஒடுங்கிய இருவகைப் பிரபஞ்சங்களையும், அவை ஒடுங்கி நிற்கும் இடமாயும் முதற்காரணமாயும் உள்ள இருவகை மாயைகளினின்றும், மீளத் தோன்றும்படி குறித்து, ஞானசக்தி மாத்திரத்தால் நோக்கி நிற்கும் நிலையில் அப்பரமசிவனுக்கு லயசிவன் என்று பெயர். இது சூக்ஷ்மலயம்.

பின்பு, சூக்ஷ்மமான இச்சை ஞானம் கிரியை என்னும் மூவகைச் சக்திகளுடன் கூடிச் சூக்ஷ்மபஞ்சக்ருத்யம் (நுண்ணிய ஐந்தொழில்) செய்து நிற்கும் நிலையே ஸ்தூலலயம்.

சூக்ஷ்மலயத்தில் சிவம் பரநாதம் எனப் பெறும். சக்தி, பரவிந்து எனப் பெறும். ஸ்தூலலயத்தில் அவை முறையே அபரநாதம் அபரவிந்து எனப்பெறும். இந்நான்கும் நிஷ்களம். இதனால், நிஷ்களத்தையும் கடந்தபொருள்

பரமசிவன் என்பது தெளிவாகும். அது நிஷ்களாதீதப் பொருள். கற்பனை கடந்தசோதி என்றது அதையே.

சூக்ஷ்ம இச்சாஞானக் கிரியைகளால் சூக்ஷ்மபஞ்ச க்ருதயம் செய்து ஸ்தூலலயமாய் நின்ற சிவம், அதன்பின், ஆன்மாக்கள் கேவலத்தின் நீங்கிப் புநருற்பவம் ஆகும்படி குறித்து, ஸ்தூல இச்சாஞானக் கிரியைகளுடன் கூடி, இருவகை மாயைகளினின்றும் இருவகைப் பிரபஞ்சங்களை யும் படைப்பதற்கு நின்ற அவசரத்தைப் போகம் என்பர். இந்த நிலையில் நின்றசிவம் 'சதாசிவம்' எனப் பெயர் பெறும். இது சூக்ஷ்மம், ஸ்தூலம் ஆகிய இருவகைப் பஞ்சக்ருத்தியத் துக்கும் பொதுவாய் நடுவில் நிற்றலால், நிட்களசகளம் ஆயிற்று.

அதிகாரம் என்றதும் சூக்ஷ்மஸ்தூலம் என்று இருவகைப் படும். அச்சதாசிவன் விந்துவினின்றும் சுத்த ப்ரபஞ்ங்களைச் சந்நிதிமாத்திரத்தால் படைத்துத் தொழில் செய்துநின்ற அவசரம் சூக்ஷ்மாதிகாரம். இதில் மகேசன் என்று பெயர் பெறும். இது ஸ்தூலபஞ்சக்ருத்யம். அதனால் சகளம் ஆயிற்று.

அநந்தேசன், உருத்திரன், மால், அயன் ஆகியவர்களை அதிஷ்டித்து நின்று, மோகினியினின்றும் மானினின்றும் மிச்சிரப்பரபஞ்சத்தையும் அசுத்தப்ரபஞ்சத்தையும் படைத் துத் தொழில் செய்யும் அவசரம் ஸ்தூலாதிகாரம். இவற் ருல், முத்திநிலைகளுள், பரமசிவன் நிலையே பரமமுக்திநிலை என்பதும், லயசிவன், சதாசிவன், மகேசன் என்பார் நிலைகள் அபரமுத்தி நிலைகள் என்பதும், அநந்தேசன், உருத்திரன், மால், அயன் நிலைகள் பதமுத்திநிலைகள் என்பதும் விளங்கும்.

நிர்விகாரியான பரமசிவனிடத்தில், லயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று அவஸ்தையும் நடைபெறுதற்கு இடம் வேண்டும். பூரணசுத்தபரவஸ்து ஆகிய பரமசிவன் அசுத்தப்ரபஞ்சத்தில் இருந்து, அம் மூன்று அவஸ்தையை மேவிப், பஞ்சக்ருதயங்களைச் செய்வது அசம்பாவிதம். அவற்றிற்கு இடம் ஆகிய சுத்தப்ரபஞ்சம் உண்டு.

அந்தச் சுத்தப்ரபஞ்சத்துக்கு முதற்காரணமாவதே சுத்தமாயை. அதிலிருந்து சப்தரூபமான வாக்குக்களும் அர்த்தரூபமான கலை முதலியனவும் தோன்றுகின்றன, அவற்றுள், சப்தப்ரபஞ்சம் முதலில் கூறப்படும். அடுத்து அர்த்தப்ரபஞ்சம் விளக்கப்படும்.

# சிவஞான தீபம்

(மலர்—27 ; இதழ்—12 ; 432-ம் பக்கத் தொடர்ச்சி)

யாதானுமொன்றிற் சித்த மழுந்து ஞான்று பிராண வாயு வெளிவருதலின்றி அதனேடொருங்குகூடி நிற்றலை மதியுடையார் மயர்விலா தறியுமாற்ருனும் இவ்வுண்மை பெறப்படுமால். இந்த யோகம் விழைவோன் - சைவ தவம் இனிது விளங்கச் சுத்த தவளநிற விபூதியினை உத்தூளனமா யணிந்துகொண்டு சீதோஷ்ணசம நயத்த மலைச்சார்பு, குளிர்ந்த அடவி, நன்னீர்க்கரை, பார்வைக் கினிமையான புடையென்பனவற்றுள் ஒன்றில், எவ்வித சத்தமுஞ் செவியி னுழையாமல், எத்திறக் கடிவாய்ப்பிராணிகளு நடைதரா மல், கற்காடுகளில்லா இடத்துழிக் கிருட்டிணாசனமேனும் வியாக்கிராசனமேனும் மிருதுவான வேறெஃதேனும் விரித் துள்ள சமதலத்தில் வடக்குமுகனுக வமர்ந்து, செவ்வேட் பரமனுகவே மதிக்கத்தக்க தன்னொரு தேசிகன்றிருவடிமலர் சிந்தித்த பின்றை முதுகுக்கும் இரண்டு விலாவுக்கும் அணை யேனும் யோகதண்டம் யோகபட்டை யென்பனவற்று ளெஃதேனுஞ்சேர்த்துப் பதுமாசனம் அல்லது (இயைந்த படி கூட்டுஞ்) சுகாசனமாக வுடம்பினைச் செய்து மார்பு, கழுத்து, தலையென்னு மூன்றுறுப்புக்களும் மற்றைப் பாகங் கட்கு நேராயிருக்க நிமிர்ந்திருந்து, மனத்துடன் இந்திரியங் களையும் அசங்கமாய்ச் சேர்த்துச் சற்றே யெண்ணமற் றிருக்கவேண்டும். இது மனோவவசிய மெனப்படும்.

இஃதாதலும், மனத்தினை யுள்ளே புகச்செய்தல் வேண் டும். இது பூரகமெனப்படும். பூரிக்கப்பட்டதை இதயகமல ஆன்மலிங்கத்தினை நாடி நிற்குமாறு தம்பிக்கவேண்டும். கும்பகத்தில் இஃதுட்கும்பக மெனப்படும். என்னை ? வெளி முகத்தே செல்லுங்காறு மிருக்கத் தக்க நிலையாகலின். பின்றை, மனத்தினை வெளியேசெல்ல விடல்வேண்டும். இஃது இரேசகமெனப்படும். இரேசிக்கப்பட்டதைக் குக னாகிய பரமன்மீது வைத்தல்வேண்டும். இது புறக்கும்பக மெனப்படும். என்னை ? பெயர்த்தும் உள்ளே புகுங்காறும் நிற்கத்தக்க நிலையாகலின். இப்புறக் கும்பகத்தினிற்குஞ் செவ்வி, பாண்டிலி லாடிடு கூத்தன் செய்கையினைப்போலப்

பிறகருமங்கள் புரியும் பொருட்டு மனத்தின் ஞாபகத்தை இரு கூறுபடுத் தொருகூற்றினை அக்கருமங்களிலும் மற்றொரு கூற்றினை உட்கும்பகத்துமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

" வினையெது புரியினு மனகனை மறவேல்."

என ஞானவாக்கியத்தும் யாங் கூறினு மன்றோ. பெயர்த்தும் பெயர்த்துஞ் செய்யப்படும் உட்கும்பகம், இரண்டரைக் கடிகைக்குக்குறையாமே காலை மாலை நாடோறும் பயிலத்தக்கது. இறை யொருவனையே நினைந்திருப்பதாய மனோலயம், அகத்தும் புறத்தும் நிருவாத தீபம்போல இனிது சித்திக்குங்காறும் இந்தயோகஞ் சில மாதங்கள் பயிலத் தக்கது. இராப்பகல் சேர்ந்த ஆறுநாள் காறுந் தைலதாரைபோல இடையறுது நிற்கும் நிலை யெய்திற் காரியஞ் சித்தியாம். பாவங்கள் பாறும். இறைவன் ஞானசாரியனாக வெளிப்பட்டருளலும் இங்ஙனமேயாம். மேல், அவனது கட்டளையின்படி நடப்பதுங் கடப்பாடாம். முன்னங் கூறிப்போந்த இந்த இராசயோகத்திற்குரிய எட்டங்கங்களும் இங்ஙனம் பொருந்துமாறுங்கண்டுகொள்க. ஆண்டே பாவிக்குமொரு பரமனுருவு மறிவுறுக்கப்பட்டதன்றோ. அஃதேனும், அவன் திருவடியேனும், ஆசிரியன் திருவுருவேனும் இங்கியப்பம்பட்ட ஆன்ம லிங்கத்துங் கோடலாம்; விகற்பொன்று மின்று. ஆசிரியனைப் பரமனாகவே நினைக.

**ப**துமாசன மென்றது, அகப்பாதமிரண்டும் மேன்முகமாய் மலர்ந்திருக்க இருதாள்களையும் படலையாகச் சேர்த்து முழந்தாள்களின் மிசை இரு புறங்கைகளையும் படியச் செய்து விரல்களை விரித்துப் பெருவிர லுனியும் ஆட்காட்டு விர லுனியும் மேனோக்கா யெய்ந்திருக்க நிமிர்ந்திருப்பதாம். கைகளை அடி யகடு பொருந்த வைத்துக்கொளினுங் கொளலாம். இவ்வப்பியாச நிகழ்கையிற் பன்னிரண்டரைக் கடிகை முதல் (உ௫) இருபத்தைந்து கடிகை வரையிலுஞ் சிற்றுறக்கமாய் உறங்கிக் கொள்ளலாம். பல்வேறு வகைப்படு தவக்கொள்கைகளினின்றும் இந்த யோகஞ் சிறப்புடைத் தென்பதை,

"மதித்த தத்து வமசிபந்நு
வயவாக் கியத்தின் வாய்மைதன்னை
விதித்த விஞ்சை யார்கோடி
மறையோர் மேலாம் பசுபதிமுன்
கதித்த வோசைச் சிவாகமத்தின்
கருதும் பொருண்மூன் றுணர்ந்துயிருட்
பதித்த பரம சிவனருளும்
பார்க்குஞ் சிவயோ கிக்கிணையோ."

எனச் சிவபுண்ணியத் தெளிவினும்,

"அரியவிம் மானுட யாக்கை பெற்றவர்
கருமயோ கங்களாற் காலந் தள்ளுவார்
உரியமெய்ஞ் ஞானயோ கத்தி னலரன்
துரியஞா னத்தினைச் சோதி யார்களே."

எனப் பஞ்சாக்ஷரப்பதிபசுபாச விளக்கத்தினும் வருசெய்யுள்களானு மறியலாமன்றே. இதுவேயுமன்றித் தலைவனை யறிதற்கு முன்னர்த் தன்னை யறிதலுந் தன்னையறிதற்கு முன்னர் ஞானநேத்திரம் பெறலும் வேண்டப்படுதலின், அந்நேத்திரம் பெறுவது இந்த யோகவழியினென வுணரலுங் கொளக்கிடக்கின்றதன்றே. அகார உகார மகார உச்சாரணத்தோடு இரேசகஞ்செய்து பூரகஞ்செய்து தம்பிக்கும் பிராணபந்தன அடயோகத்தை இங்கே செய்யவேண்டுமென்பதின்று. எதனலெனின், - பிராண இயக்கத்தினற் பூரணபோத மசைந்து மனமாய் விளைதலினலும், மனத்தைப் பந்திக்கிற் பிராணனும் பிராணனைப் பந்திக்கின் மனமுமடங்குதலினலுமென்க. இந்த யோகத்தை யினிதுபற்ற வறியாது கரும மனுட்டிப்பார் சிலர், சுட்டுவிரல் நடுவிரல்களை மடக்கிக்கொண்ட வலக்கைப் பெருவிரலினல் வலமூக்கினைப் பிடிக்குங்கால் வெளிக்காற்றினை யிடமூக்கினல் ஒருமுறை உள்ளே வாங்குதலைப் பூரகமென்றும், பெருவிரல் ஆழிவிரல்களினல் வலமூக்கினையும் இடமூக்கினையும் பிடிக்குஞான்று பூரித்த காற்றினை யொருமுறை யுள்ளே நிறுத்துதலைக் கும்பகமென்றும், ஆழிவிரலினல் இடமூக்கினைப்

பிடிக்கும்போது கும்பித்த காற்றினை வலமூக்கினால் ஒரு முறை வெளியேவிடுதலை இரேசகமென்றுஞ் செய்துவாளா நாளைக் கழிப்பர்.

ஆசனத்திலமர்ந்து மேலே கிளந்து போந்த இராசயோகந் தொடங்குவதற்கு முன் முதல்வனது திவ்விய திருநாமத்தை நூற்றெட் டுருவுறச் செபிக்கலாம். அஃதாசாரியன் உபதேசித்த முறையிலே "சிவாயநம:" எனவும், "சரவணபவாயநம:" எனவு நிகழத்தக்கது. முதற்கண் ஓம் என்பது கூட்டியுஞ் செபிக்கலாம். செபமணி, ஐந்து முகம் அல்லது ஆறு முகமுள்ள பழுதில்லாத எந்நிற வுருத்திராக்ஷமுமா யிருக்கலாம். அவ்வைந்து முகமும் ஆறுமுகமுங் கலந்து கோத்தமாலை ஆகாது. நூற்றெட்டு மணியேனும் ஐம்பத்துநான்கு மணியேனும் முகத்தோடு முகமும் அடியோடடியும் பொருந்தக் கோக்கப்பட்ட செபமாலையாகும். செபிக்குங்கால், மணிகள் ஒன்றோடொன்றடிபட்டொலிபிறத்தல் கூடாது. செபமும் பிறர் செவியிற் படலொண்ணாது. துறவி, விரலிறையைக்கொண்டு உரு எண்ணலாம். அதன்முறை - "வலக்கையின் பெரு விரனுனியால் ஆழிவிரலின் அடியிறைமுதல் நடுவிரலின் அடியிறை யீறுக வலமாய்ச் சுற்றித் தொடுதல் செய்தலி னேற்படுமெண் ஒரு பத்தாகும்; அப்பத்தாதலும் மடக்கியுள்ள இடக்கை விரல்களு ளொன்றனை விடல்வேண்டும்; அப்படிப் பப்பத்து ஆக ஆக மற்றை நான்கு விரல்களையும் விட்டுப் பின்னர் ஐந்து விரல்களையும் ஒரோ வொன்றாக மடக்குமாற்றானே நூறு உருக் கண்டுகொள்ளலாம்; நடுவிரல் ஆழ்விரல்களிலுள்ள நடு இறை யிரண்டனையும் விரல்களி னுனிகளையும் பெருவிரனுனி தீண்டொண்ணாது" எனவாம். அந்நடுஇறை யிரண்டுஞ் சிவனுஞ் சக்தியுமென மதிக்கவுள்ளன. பிறர் விழிக்குப் புலப்படாது அச்செபமாலையுஞ் செபவிரலிறைக்கையும் பரிவட்டத்தினன் மூடப்படல் வேண்டும். எக்காலத்தும் உட்புலத்தே மானசமாகச் செபஞ்செயற்கு உரு வளவும், ஒரு தடையும் இல. செபிப்போன் ஞாபகம், ஈசன் திருவடியி லிருத்தல்வேண்டும்.

செவ்வேட் பரமனது திருமேனியாய்த் திருப்பெயரா யிராநின்ற ஓங்காரமும் மானசமாகச் செபிக்கத்தக்கதே யாம். இதன்பொருள் செவ்வேட் பரமனேயென ஞாபகஞ் செய்து செபிக்க வேண்டும். இது சூக்கும சடக்கரமென் றுங் கூறப்படும். அந்தர்முக ஆன்மலிங்காகார பாவனையில் இவ்வோங்கார வடிவும் பாவிக்கத் தக்கதே. அவ்விலிங்க மும் அவ்வடிவிற்றே. இது, சில வெழுத்துக்களோடிணைத் துபதேசிக்கப்படின், தனியாகு செபத்திற்குரியதன்று. அவ்வாறு செபித்தற்குத் தனியுபதேசமும், ஆசிரிய கட்டளை யும்பெறல் சற்சீடர் கடப்பாடாகும். நாடோறும் (கஉ000) பன்னீராயிர முறை செபிப்போற்குப் (கஉ) பன்னிரு திங்க ளுட் பரப்பிரமம் பிரசன்னமாமென்று சுருதி சொல்லு கின்றது.

விழிக ணன்கு விளங்கித் தழைப்பான் கதிரவற்றொழல் வேண்டும். அத்தொழில், சூரியோதய மானவுடன் சூரிய மண்டலத்தைத் தரிசித்து அதனடுவே செவ்வொளி நிறமுடைச் செவ்வேட்பரமனைப் பாவித்து "ஓம் கடாதித்ய குஹாயநமஃ" என்று ஆறுருச்செபித்து ஆன்மப்பிரதக்ஷி ணஞ் செய்து உடம்பு நிலம்படிய வீழ்ந்து வணங்குதலாம். இங்ஙனம், ஐம்முகச்சிவனை வணங்குவதாயின் மந்திரம், "ஓம் கடாதித்ய சிவாயநமஃ" எனவும், உரு ஐந்தெனவு முணர்ந்து கொள்க. இந்தக் கடஆதித்யன், செவ்வேட் பரம னது பாரமேசுரப் பேருருவில் ஒரு விழியாகத் திகழ்ந்துளன். பரம ரகசிய முணர்ந்தவன், தனது வலக்கண்ணகத்தே இவ் வுபாசனையைச் செய்துகொள்வன்; ஆசிரிய னுத்தரம் பெற்று. மந்திரவுரு ஒன்றேயாம்.

### பத்தாவது

## அனுட்டானவிதியியல்

### குமாரோபாஸ்தி

**யா**தானுமொரு நீர் நிலையிலுள்ள நற்றீர்த்தத்தைப் பரி சுத்த கங்கையாகவுஞ் சரவணப்பொய்கையாகவும் பாவித்து,

நாபியளவினதாகிய நீரில் வடக்கு அல்லது கிழக்கு முகமாக நின்று கொண்டும், ஓடுகிற நதியாயின் அதற்கெதிர்முகமாக நின்றுகொண்டுஞ் செவ்வேட்பரமனைச் சிந்தித்து, வலக்கை விரலால் ஓங்காரம் வரைந்து, அதனடுவே நின்று, சருவ பாவநாசமுஞ் சருவபுண்ணிய விருத்தியு முண்டாமாறு சிந்தித்து,மும்முறை மூழ்கியெழுந்து கரையேறல் வேண்டும். நீர் நிலையில்லாவிடத்தே முழுகநேர்ந்து முழுகுஞான்று இறுதியிலொரு சிறு கலசநிறைய வெடுத்துக்கொள்ளு நீரை நோக்கி—

கங்கேசயமுநேசைவ கோதாவரீஸரஸ்வதீ |
நர்மதேசிந்துகாவேரீ ஜலேஸ்மிந்ஸந்நிதிம்குரு |
ஆயாந்து ஸுப்ரஹ்மண்ய பூஜார்த்தம்
துரிதக்ஷயகாரகா ஃ ||

என்று சொல்லி நமற்கரித்து, அதன்கண்ணே ஆழிவிரல் கொண்டு சட்கோண யந்திரஞ் செவ்வனே வரைந்து, நடுவில் ஓங்காரமுங் கோணங்களிற் சகாரமுதல் வகாரமீறான ஸ்ரீ சடக்கரமு மெழுதி, அம்மந்திரத்தை ஆறுமுறை செபித்து அந்நீரைச் சிரசில் விட்டுக்கொள்ளலாம். மேல், ஒருலர்ந்த கோவணந் தரித்து நல்லாடையு முடுத்த பின்றை—

"ஓம் அஸ்த்ராயபட்" என்று சொல்லி இருப்பிடத்திலே நீரைத்தெளித்துப் பூமியைச் சுத்திசெய்து கோடலும், அதன்கண் வடக்குமுகமாகவேனுங் கிழக்குமுகமாகவேனு மேராசனத் தமர்தலும்,முருகப் பெருமானையே கணபதியாய் நினைந்து "ஓம் கணபதயே நமஃ" என்று குட்டிக் கோடலும், குருவை நினைந்து "..........குருப்யோ நமஃ" என்று கும்பிடலும், அனுட்டான நீரை, "ஓம் சிவாய நமஃ" என்று சொல்லி வலக் கண்ணா லுலர்த்தி, நெற்றிக் கண்ணா னீற்றி, இடக் கண்ணால் அமுதங்கொடு நனைத்துக் கொண்டதாகப் பாவித்துச் சலசுத்திசெய்து கோடலும், "ஓம் அஸ்த்ராய நமஃ" என்று சொல்லி அந்நீர்த் துளிகள் தன்றலைமிசை வீழ மும்முறை தெளித்துக் கோடலும், "ஓம் அஸ்த்

ராய ஸ்வாஹா" என்று சொல்லி அந்நீரை மும்முறை தருப்பித்துக் கோடலும், "ஓம் அஸ்த்ராய நமஃ" என்று பத்து முறை செபித்த பின்னர் முன்போலவே "ஓம் அஸ்த்ராய ஸ்வாஹா" என்று ஒரு முறை தருப்பித்துக் கோடலும், மேல்—வலக்கைப்பெருவிர லடியிற்றங்கிய உழுந்தமிழளவை நீரினால் — "ஆத்மதத்வாய ஸ்வதா" "வித்யாதத்வாய ஸ்வதா" "சிவதத்வாய ஸ்வதா" என்று மும்முறை ஆசமனஞ்செய்தவுடன் "ஓம் அஸ்த்ராய பட்" என்று சொல்லி உதடுக ளிரண்டனையும் வலக்கைப் பெருவிரல்கொண்டு இடமாக விருமுறையும், வல அங்கைகொண்டு கீழாக வொரு முறையுந் துடைத்தல்செய்து கை கழுவலும், மேல்—

"ஓம் ஹ்ருதயாய வௌஷட்" என்று வலக்கைப் பெருவிரலோடு சேர்ந்து ஆழிவிரலான் முகம், வலமூக்கு, இடமூக்கு, வலவிழி, இடவிழி, வலச்செவி, இடச்செவி, நாபி, மார்பு, வலத்தோள், இடத்தோள், சென்னியென்னும் பன்னிரு தானங்களையுந் தொட்டுவிடலுங் கருமானுட்டான முடையாரால் விரும்பப்படுகின்றன.

விபூதிக் கோவிற்க ணுள்ள தவளநிற விபூதியினை வலக்கையா னெடுத்து இடக்கையில் வைத்து வலக்கையான் மூடிக்கொண்டு பஞ்சப்பிரமபீஜ சடங்க மந்திரங்களாய பதினொரு மந்திரத்தினலும் அபிமந்திரித்து, "அஸ்த்ராய பட்" என்று உத்தூளனமாகப் பூசிக்கொள்ளவேண்டும். திரிபுண்டரமாக இடவேண்டுமாயின்—

"ஈசாந மூர்த்தயே நமஃ" என்று சென்னியிலும்,
"தத்புருஷ வக்த்ராய நமஃ" என்று நெற்றியிலும்,
"அகோர ஹ்ருதயாய நமஃ" என்று நெஞ்சிலும்,
"வாமதேவ குஹ்யாய நமஃ" என்று நாபியிலும்,
"ஸத்யோஜாத கவசாய நமஃ" என்று இருதோள்,

இருகரநடு, இருமணிக்கட்டு, இருவிலா, முதுகு, கழுத்து என்னுமிடங்களிலிட்டு"அஸ்த்ராய பட்"என்றுகை கழுவுக. அழகினவாயிடப்பட்ட அப்புண்டர இடைவெளிகள் ஒவ்வோரங்குல அளவினவாக விருத்தலே நலனென வெண்

ணப்படுகிறது. துறவிக்கு உத்தூளனமாகப் பூசுதலே முக்கியமாம். மேல்—

(அங்கந்யாஸ꞉)

"ஓம் அஸ்ய ஶ்ரீஸுப்ரஹ்மண்ய மஹாமந்த்ரஸ்ய த்ரிபுராந்தகருஷி꞉ அநுஷ்டுப்ச் சந்த꞉ ஸுப்ரஹ்மண்யோ தேவதா போகமோக்ஷார்த்தே ஜபேவிநியோக꞉" எனவொருமுறை சொல்லி நமற்கரிக்க வேண்டும். சொல்லுஞ் செவ்வி, வலக்கை தலையைத் தொட்டுக்கொண்டும், இடக்கை வலக்கையைத் தொட்டுக்கொண்டும் எழிலாயிருத்தல் வேண்டும். மேல்—

(க) ஓம் ஸ்கந்தாய அங்குஷ்டாப்யாம் நம꞉ (உ) ஓம் கார்த்திகேயாய தர்ஜநீப்யாம் நம꞉ (ங) ஓம் ஸுப்ரஹ்மண்யாய மத்யமாப்யாம் நம꞉ (ச) ஓம் ஸேநாந்யை அநாமிகாப்யாம் நம꞉ (ரு) ஓம் குஹாய கநிஷ்டிகாப்யாம் நம꞉ (சு) ஓம் ஷடாநநாய கரதலகரப்ருஷ்டாப்யாம் நம꞉ (எ) ஓம் சம் ஹ்ருதயாய நம꞉ (அ) ஓம் ரம் சிரஸே ஸ்வாஹா (கூ) ஓம் வம் சிகாயை வஷட் (க0) ஓம் ணம் கவசாய ஹும் (கக) ஓம் பம் நேத்ரத்ரயாய வௌஷட் (கஉ) ஓம் வம் அஸ்த்ராய பட் என அந்த அந்த இடங்களைத் தொட்டுவிட்டு "பூர் புவஸ் ஸுவரோம் இதி திக்பந்த꞉|" என்று சொல்லவேண்டும். மேல், 'த்யாநம்' என்று சொல்லிக்கொண்டு—

(த்யாநம்)

'ஸிந்தூராருணமிந்துகாந்திவதநம் கேயூரஹாராதிபிர்
திவ்யைராபரணைர்விபூஷிததநும் ஸ்வர்க்காதிஸௌக்யப்ரதம் |
அம்போஜாபயசக்திகுக்குடதரம் ரக்தாங்கராகாம்சுகம்
ஸுப்ரஹ்மண்யமுபாஸ்மஹேப்ரணமதாம்பீதிப்ரணாசோத்யதாம் ||'
'கரத்தி லமர்வேலுங் கட்டழகார் மொய்ம்பிலணி கடம்புமாறு
சிரத்தி லவிர்முடியுந் தேசுசெறி காதணியுந் திகழ மாசில்
உரத்தி லணிபுரள வொளிர்தேவி யிருவரொடு
வரத்தையருள்குகனேர்வரினெற்குங்கருக்கட்டு வருவதுண்டோ.'

—திருவலங்கற்றிரட்டு - ஆசிரியத்துறை.

என்று சொல்லித் திருவுருவைத் தியானித்து நமஸ்கார முத்திரையினுற் கும்பிடல்வேண்டும். மேல், ஒன்பதாவது இயலிற் சகார முதலாகக் கூறியுள்ள திருநாம சடக்கர மகா மந்திரத்தை நூற்றெட்டுரு நன்கு செபித்தல் வேண்டும்.

## சோட சோப சாரம்

பூசிக்கத்தக்க யாதொன்றனில் "ஸ்ரீ வல்லீ தேவ ஸேநாம்பா ஸமேதம் அகண்டஞான சிவஸுப்ரஹ்மண்யம் ஆவாஹயாமி" என்று தேவிகளோடு மமர்ந்துள்ள ஸ்ரீ குமார பிரானை ஆவ்வாகனஞ் செய்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்துகொண்ட பின்னர்—

(க) ஆஸநம் ஸமர்ப்பயாமி (தவிசளித்தல்) (உ) பாத்யம் ஸமர்ப்பயாமி (கால் கழுவு நீருதவல்) (ரு) அர்க்யம் ஸமர்ப் பயாமி (கை கழுவு நீருதவல்) (ச) ஆசமநீயம் ஸமர்ப்பயாமி (ஆசமன நீருதவல்) (ரு) சுத்தோதகஸ்நாநம் ஸமர்ப்பயாமி (அபிடேகம்) ஸ்நாநாந்தரம் - ஆசமநீயம் ஸமர்ப்பயாமி (சு) வஸ்த்ரயுக்மம் ஸமர்ப்பயாமி (எ) உபவீதம் ஸமர்ப்பயாமி (சு, எ) அக்ஷதையாற் செய்யலாம். (அ) கந்தாம் தாரயாமி (சந்தனம்) (கூ) புஷ்பாணி பூஜயாமி (பூக்கள், அக்ஷதை) (க0) தூபம் ஸமர்ப்பயாமி (கக) தீபம் ஸமர்ப்பயாமி (தர்சயாமி) மும்முறை வலமாகச் சுற்றற் குரியன. (கஉ) நைவேத்யம் நிவேதயாமி நைவேத்யாந்தரம் - அர்க்யம் ஸமர்ப்பயாமி, பாத்யம் ஸமர்ப்பயாமி, ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, தாம்பூலம் ஸமர்ப்பயாமி (கரு) கர்ப்பூர நீராஜநம் ஸமர்ப்பயாமி (மந்திர புட்பமும், சாமரம் ஸமர்ப்பயாமி ஆலவட்டம் ஸமர்ப் பயாமி சத்ரம் ஸமர்ப்பயாமி (குடை) தர்ப்பணம் தர்சயாமி (கண்ணடி) ஸ்தோத்ரம் ஸமர்ப்பயாமி

"கருப்பத் தூறிப் பிறவாதே கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தனுபூதி சிறக்கப் பாலித் தருள்வாயே
பரப்பற் றுருக் குரியோனே பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச்சேவற்கொடியோனேசெகத்திற்சோதிப் பெருமாளே."

—திருப்புகழ்

"முதலுமாய் நாப்ப ணாகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகச்சிர நாமா போற்றி
மதிபுனை பரம னார்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுளவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணா போற்றி.
—குமர குருதாச சுவாமிகள் பாடல்

"பொன்னுயர்நாட்டிறைபுத்திரிதனை மன்றல்புரிந்துசெந்தினை
மின்னினைமாமணஞ்செய்தருணாடியவித்தகர்தமையாண்டு [காத்த
நன்னலநல்கருள்வேந்தெனவிளங்குநான்மறைகளும்விரித்துப்
பன்னரும்பரமெனவிருக்குநந்தேவுக்குப்பல்லாண்டு கூறுதுமே"
—திருவலங்கற்றிரட்டு

(கச) நமஸ்காரம் ஸமர்ப்பயாமி (கரு) ப்ரதக்ஷிண நமஸ்காரம் ஸமர்ப்பயாமி (கசு) திவ்ய சயநம் ஸமர்ப்பயாமி (அமளியிற் படுத்திருக்கும்படி வேண்டல்) என்று அந்த அந்த உபசாரங்களைச் செய்க. முடிவிலே "ஸர்வோபசாராந் ஸமர்ப்பயாமி" என்றுஞ் சொல்லுக. இன்னும், பிரார்த்தனையோடுங் கூடிய தோத்திரமாகப் பண்ணோடும் பாட விருப்புளதாயின், திருவலங்கற்றிரட்டு முதலிய நூல்களிலுள்ள பாடல்களை யுபயோகித்திடுக. பஞ்சாமிர்த வண்ணத்தை நாடோறும் பாடுக. திருத்தொடையல் ௬௦ - செய்யுளும் அவ்வாறு பாடத்தக்கன. நோய், வறுமை, பகை, பயங்கரம், பாவம், அவமிருத்து முதலிய நிவாரணார்த்தம்— "அண்டமா யவனியாகி" என்பதாதியாய் அகாராதி னகாராந்தந் தொடாக்கமாய் வரூஉம் ௬௦ - செய்யுளாகிய சண்முககவசமும் ஒரு முறை பாராயணஞ் செய்யத்தக்கது. மிக்க துன்ப நீக்கத்தின் பொருட்டாயின் நாளொன்றற்குப் பாராயணம் ஆறுமுறை செய்தல் வேண்டும்.

சிவலிங்க தரிசனஞ் செய்யுங்காலை, பஞ்சப் பிரம பீசம் ஐந்துனுள் ரு - முதல் க - வரையிலு முள்ளனவற்றை நிரலே சொல்லிய பின்றை "ஓம் அதோமுகாய நமஃ" என்றுஞ் சொல்லி ஆறுமுக பாவனை பண்ணி வணங்கல் வேண்டும். முறை—உச்சிமுகம், கிழக்குமுகம், தெற்குமுகம், வடக்குமுகம், மேற்குமுகம், கீழ்முகமென் றறிக.

ஈசுவரார்ப்பணத்திற்குரிய் எப்பதார்த்தத்தையு நோக்கி "ஓம் அஸ்த்ராய பட்" என்று நீரைத் தெளித்தேனுந்திருநீற்றினை யிட்டேனுஞ் சுத்திசெய் தெடுத்து உபயோகித்தலும், புசிக்கத்தகு பதார்த்த மெதனையும் உயிர்க்குயிராய்த் தன்னுள் அந்தரியாமியா யிருக்குங் குகேசனுக்கு அர்ப்பணம் பண்ணியே யுண்டலு நன்மை பயப்பனவா யெண்ணப் படுகின்றன. இந்நெறி நிற்போன், பிறர் தனக்குச் செய்யும் வந்தனத்திற்குத் தானும் பிரதி வந்தனஞ் செய்து அவ்விரண்டனையும் ஈசுவரார்ப்பணம் பண்ணி யிடல்வேண்டும். அவர் நல்கு பொருள்களும் அங்ஙனமே ஆகத்தக்கன. இந்நெறியோனாகிய தான், அவ்வண்ணஞ் செய்யாவிடில் அன்னோர் பாவமும், அப்பொருள்களின் வழியாய் ஏதேனும் வருபாவமுந் தன்னைச்சாரும்; தனது புண்ணியமும் அவரைச்சாரும். இருளுள்ள இடத்தில் உணவுகொள்ளொண்ணாது. தீபமவியின், அஃதேற்றப்பட்டு வருங்காறும் ஸ்ரீசடக்கரத்தை மானசமாகச் செபித்துக்கொண்டிருந்து அத்தீபங் கண்ணுற்றவுடன் எஞ்சிய வுணவையும் புசிக்கலாம். இராப் புசிப்புண்டல் கச - கடிகைக்குட்படின் நன்மை பயக்கும். உறங்கத் தொடங்குஞான்று—

" திருமா லயனெண் டிசைநின் றுளருஞ்
செருவா னவருஞ் சிவசங் கரனார்
உருவென் றுணர்வோ ரறிவா யொளிரும்
ஒருகந் தபிரா னுயிர்நா யகனே," [து - பாடல்]

என்னும் இத்திருச்செய்யுளை யொருமுறை சொல்லிக் குமாரபிரான் றிருவடியைப் பாவனையால் இதய கமலத் திருத்திக்கொண்டு இடக்கை கீழாகப்படுத்துக் கண்படை கொள்ளவேண்டும். இடக்கை கீழாகப்படுத்தலினாற் பிராண வாயு இனிதியங்கும். மாகேசுரரைப்பூசித்து அவர்கட்குத் திருவமுது செய்வித்தபின் உண்ண நினைப்போன், சிவ சின்ன தாரணர்களான அவர்களுடைய திருவடிகள் விளக்குந் தன்மையாலே திவ்வியதீர்த்தமா யேற்பட்ட நீரினைத் தன்றலைமேற் றெளித்துக்கொண்ட பின்னர் முன்னரேயே

சாணியினுன் மெழுகப்பட்டுக் காய்ந்துள்ள இடத்தில் அவர்களை வைகும்படி செய்யக்கடவன். இரவிற்சாணி சுத்தமிலதாகலின் அக்காலத்தே அஃதுபயோகித்தில்கூடாது. மாகேசுரர் புசித்தவிடத்திற் சாணியிடலுங்கூடாது. சுரை, முருங்கை, கொம்மடி, அத்தி இவற்றின் காய்களும், வெள்ளுள்ளி, பொருங்காயமென்பனவும் மாகேசுர ருண்ணுமுணவிற் சேராது தள்ளற்குரியன. அவர்களைக் குமாரக் கடவுளாகவே பாவித்து நடப்பது அப்பூசை புரிவோன் கடனும். இங்ஙன நிகழ்பூசையினை அம் மாகேசுரரும் அக் கடவுட்கே சமர்ப்பித்தல் நலனும்.

நெருப்பையேனுஞ் சாம்பரையேனும் ஒருஞான்றும் மிதித்தல் கூடாது; தாண்டுதலுங் கூடாது. இவற்றை மனமாரச் செய்தக்கால், தீக்ஷைகெடும். பிறர்க் குரைப்ப தில்லையென ஆசிரியனது திருமுன்னே உறுதிமொழி கூறி, இரகசியமா யுபதேசிக்கப்பெற்ற மந்திரத்தினை முறையினை வெளியிடினுந் தீக்ஷைகெடும்; தோடமுமெய்தும். யாதானு மொரு அசுத்தநேரிற் கையிரண்டுங்காலிரண்டுங் கழீஇ ஆசமனமுஞ் செய்தலென்னும் பஞ்ச சுத்தி செய்துகொண்டு திருநீற்றினை யெடுத்துச் 'சிவ சிவ' என நெற்றியிற் பூசிக் கொள்ளலையும் உட்கொள்ளலையும் புரியிற் சுத்தமுண்டாம். இங்ஙனம், மந்திர ராஜமாகிய சடக்கரத்தை ஆறுமுறை செபித்தலுமாம்.

எனக்கொரு செயலுமின்று யாண்டுஞ் சிவன்செயலே யுள தென்று அது பாவித்து அதன்கண்ணே தான் மௌனியா யடங்கிநின் றெழல் ஆன்மசுத்தியென மதிக் கப்படுகிறது. இத்திறமுடையானே உள்ளும் புறம்பும் பூசனை புரிய யோக்கியனுவன்; ஐயமின்று. ஆசிரியன், அத்துவா சுத்தியெனப் பாவனையாற் செய்வனவற்று ளொன்றும் இவனுக்கு வேண்டியதின்று.

(௧) ஓம் ஸம் ஸத்யோஜாதாய நம: (௨) ஓம் ஸிம் வாம தேவாய நம: (௩) ஓம் ஸூம் அகோராய நம: (௪) ஓம் ஸேம் தத்புருஷாய நம: (௫) ஓம் ஸோம் ஈசாநாய நம:

என்னும் இவ்வைந்தனையும் பஞ்சப்பிரமபீசமென்றும், (க) ஓம் ஸாம் ஹ்ருதயாய நம: (உ) ஓம் ஸீம் சிரஸே ஸ்வாஹா (ந) ஓம் ஸூம் சிகாயை வஷட் (ச) ஓம் ஸைம் கவசாய ஹூம் (ரு) ஓம் ஸௌம் நேத்ரத்ரயாய வௌஷட் (சூ) ஓம் ஸ: அஸ்த்ராய பட் என்னும் இவ்வாறனையுஞ் சடங்கமந்திர மென்றும் (க) ஓம் ஸூம் ஸுப்ரஹ்மண்யாய நம: (உ) ஓம் கும் குமாராய நம: (ந) ஓம் ஹம் ஹரஸூநவே நம: (ச) ஓம் ஸூம் ஸூராக்ரஜாய நம: (ரு) ஓம் ஸேம் ஸேநாபதயே நம: (சூ) ஓம் ஸூம் ஸூரேச்வராய நம: என்னும் இந்த ஆறனையுஞ் சண்மூர்த்திமந்திர மென்றும், (ஓம் ஸ்ரூம் ஸ்கந்தாய நம:) "ஓம் ஸ்ரூம் ஸ்கந்தாய நம:" என்னும் இவ்வொன்றனை மட்டும் மூலமந்திர மென்றும், ஓம் சரவணபவ ஹ்ரீம்) "ஓம் சரவணபவ ஹ்ரீம்" என்னும் இதனைச் (ஷடக்ஷரம்) சடக்கர மென்றுங் குமாரதந்திரமென்னும் ஆகமங் கூறுகின்றது. இவற்றுள் ஆன்றோர் செபித்தலில், தொன்று தொட்டுப் பெரிதும் வழங்கிவருவது சடக்கரமேயாம். இம்மந்திரத்தை ஒன்பதாவது இயலிலே காட்டியவாறு நமோந்தமாகவே செபித்துப் பெரும்பேறு பெறலாம்; ஐயமின்று. சகச்சிர நாமார்ச்சனே, அட்டோத்தரசத நாமார்ச்சனை செய்தற் கேலாதார், சண்மூர்த்தி மந்திரங் கொண் டருச்சிக்கலாம்.

இவ்வொரு பிறவியிற்றானே வீடுபேறு விரும்புநரெல்லாம், இவ்வியற்கட் கூறப்பட்ட 'பூமிசுத்தி' முதலியவைகளையும் இவற்றிற்கு வேறாய் இரகசியமா யுள்ளவைகளையும் மஹாதேஜோமண்டலத்தாருள் உபதேசிக்க அதிகாரம் பெற்றாரிடந் தீக்ஷையாகப் பெற்றும், செய்யுமுறைகளைக் கேட்டும் அனுட்டிக்கலாம். பலபல புத்தகங்களுட் பலபல கிரியானுட்டானங்கள் கூறப்பட்டுள. அவற்றையெல்லாஞ் செய்யத் துணிந்தக்கால் ஒரு நாளெனப்படும் அறுபது கடிகையுமே போதாமையாகும். ஆகவே முக்கியமான செப தியானங்களும் பல்காதென வுணரும் விவேகிகட்கு இச் சுருக்க அனுட்டிப்புக்களே கோடற்பாலனவாம். பத்தி

விக்கினமும், முத்தி விக்கினமுமான பலதேவ வழிபாடுகள் மஹாதேஜோ மண்டலத்தார்க் குடம்பாடில்லை யாகலின் அவ்வித கிரியானுட்டானங்களும் இங்குங் கூறப்படவில்லை. ஓர்க. குமாரசம்பந்த ஆதித்தியவழிபாடு, போந்த ஒன்ப தாவது இயலிலேயே கூறியாயிற்று.

ஆசிரியன், தீக்ஷாகாலத்தில், இறைவன் சம்பந்தமா மாறு ஒரு நற்பெரும் பெயரை மாணவகனுக்கிட்டு வழங் கும்படி செய்க.

பெண்கள், தங்கள் பூப்புக் காலத்தே ஸ்ரீ சடக்கர த்தை மனசிலே சிந்தித்துக்கொண் டிருக்கலாம். நோய் முதலிய புன்கணுளே தேகதிட மில்லாதார், நீர்விட்டுக் குழையாத் திருநீற்றினைச் 'சிவசிவ' என்று தலையிலிடு தலையும் நெற்றி கைகண் மார்பு கழுத்தென்னு முறுப்புக்களிற் பூசு தலையுஞ் செய்து ஸ்ரீ சடக்கரத்தைச் செபித்துக்கெண்டுங் குமாரபிரான் றிருவடியைத் தியானித்துக்கொண்டுங் காலத்தைக் கழிக்கலாம்.

வா ழ் த் து

கலிவிருத்தம்

அருணை யம்பதிப் பேர னுய்யவோர்
கருணை காட்டிய கந்த ளுேக்கினுன்
இருணை வ்ரயிறச் செய்யிந் நூலுமிஃ
தருணன் கோர்ந்தறை வாரும் வாழ்கவே.

சிவஞானதீப முற்றிற்று

குமாரகுருபரன் றிருவடிவாழ்க

திருச்சிற்றம்பலம்

——

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்

இந்நூலாசிரியருக்கு இளமையிலே திரமிடம்
பயிற்றுவித்தவரும், பாம்பன் : தமிழ்ப்பாடசாலை
உபாத்தியாயரா யிருந்தவருமாகிய
ஸ்ரீலஸ்ரீ க. மு. முனியாண்டியாபிள்ளையவர்கள்
இயற்றியது

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஆழிசூ ழுலகத்தி லாயகலை வழுவின்றி
யாயுநல் லறிவுவிஞ்சி
அகிலநனி சந்ததந் தெளிவுபெற் றுய்யவு
மரனடிக் காளாகியுட்
பாழிலா தின்னன்பர் பத்திவழி முற்றவும்
பண்ணவர்கள் சொற்றவாறே
பகருமுறை யாலினிய கனிகண்டு சீனியின்
பண்பெலா மொன்றமுதமாய்த்
தாழிதனி லிடுமத்தி னுடையும்வெண் டயிரெனச்
சஞ்சல விகாரமெவையுந்
தள்ளவளர் சிவஞான தீபமென்னு மொண்பெயர்
தனைப்பெற் றிலங்குநூலை
வாழினிய சற்சனன் மாவிரத விற்பனன்
மதிகொ*ளப் பாவுநிபுணன்
வசனரூ பத்தினில் வகுத்தனன் குமரகுரு
மாவருட் டகைமைகொண்டே. (க)

---

*அப்பாவு. இஃது இந்நூலாசிரியர்க்குத் தந்தை தாயரா னிடப்பட்ட பிள்ளைத் திருப்பெயர்.

பொன்னேறு மேனியில் வெண்ணீ றிலங்கவும்
பொங்குகுளிர் கங்கைவிதுவார்
புரிகிடையி லேபுனைந் திட்டவெழி னிலவவும்
பொதுநடஞ் செய்தபரமன்
முன்னேறு கருணைகொண் டினியகவி மழைகொடு
முழுக்கவற் காட்டவென்று
முதுமறைக ணித்தலும் புகழ்பரப் பிரமகுரு
முருகவே ட்ன்னையென்றுந்
தன்னு ரகத்துழி யிருத்திப் படித்தருட்
டன்மைமிக வுற்றபொறைமா
தகவுடைக் குமாரகுரு தாசனெனு நற்பெயர்
தனைக்கொண்டுள் இகபரத்தும்
முன்னோ ரதிர்த்தநெறி வழுவாம லுட்பொருண்மை
முழுவது முணர்ந்துலகினர்
முத்திநிலை கூடிடச் சிவஞான தீபநூல்
முற்றுற மொழிந்தனரோ. (உ)

---

**சிவஞானதீபம்**—பிரதி ஒன்றின் விலை அணு எட்டு.
**செவியறிவுறூஉ** ,, மூன்று.

கிடைக்குமிடம் :—

1. சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை—1
2. த. வேங்கடாசல முதலியார்,
1/34, ஆபீசு வேங்கடாசல முதலியார் தெரு,
திருவல்லிக்கேணி - சென்னை—5.